# பெரியார்கள் கண்ட உண்மை

தொகுத்தவர் :
**க. மா. மு. கந்தசுவாமி**
ஸ்ரீ விவேகானந்த இல்லம்
49, வடக்குவீதி, வேதாரண்யம்.




மூன்றாமாண்டு நினைவு நாள் வெளியீடு

# பெரியார்கள் கண்ட உண்மை




தொகுத்தவர் :

**கூ. மா. மு. கந்தசுவாமி**

ஸ்ரீ விவேகானந்த இல்லம்
49, வடக்குவீதி, வேதாரண்யம்.

## மூன்றாமாண்டு நினைவு நாள் வெளியீடு

1985 —

# முன்னுரை

என் மனைவி, தையநாயகி 17-3-86இல் இயற்கை யெய்தினாள். இதற்கு நான் ஈமக்கிரியைகள் [சாத்திரச் சடங்குகள்] செய்யவில்லை. இச்சாத்திரங்கள் கற்பனை யென்றறியாத, பல அன்பர்கள், நண்பர்கள், உறவினர் கள், நான் பெரும்தவறு செய்து விட்டதாகவும், பாவத் திற்காளாகி விட்டதாகவும், இறந்தவர் நற்கதிக்கு வகை செய்யவில்லையென்றும் கூறினார்கள். இப்படி யாக இவர்களுடைய குற்றச்சாட்டுக்காளானேன்.

இக்கட்டத்தைப் பயன்படுத்தியே, உண்மை தத்து வத்தைக் கூறத் திட்டமிட்டேன். முதல் நினைவுநாளில் திருவாரூர் பிரம்மவித்யாபீட கௌரவத்தலைவர் பிரம்ம வித்யாயனி மாணிக்கவல்லியம்மையார் அவர்கள் உபந் நியாசம்செய்தார்கள். ஆன்மவிளக்கம் என்ற தலைப்பில் தக்க ஆதாரங்களுடனும், அனுபவரீதியாகவும் பேசினார் கள். முற்பிறவி, மறுபிறவி, பாவபுண்யம் மோட்சநரகம் யாவும் கற்பனையென்று கூறினார்கள்.

நானும் முதலாண்டு நினைவு நாள் வெளியீடாக "சரீர ஆன்ம விளக்கம்," என்ற நூலை வெளியிட்டேன். இரண்டாமாண்டு நினைவு நாள் வெளியீடாக, மணி

தாதி பிரபஞ்ச நிலைமையை விளக்கி "உலகப் பொது நூல்," என்ற நூலும் வெளியிட்டேன்.

இரண்டாமாண்டு நினைவு நாள் வெளியீட்டில் கற்பனைக் கடவுள்கள், கற்பனைச் சாத்திரங்களேற்பட்ட விதத்தை மூன்றாமாண்டு நினைவு நாள் வெளியீட்டில் கூறுவதாக அறிவித்தேன். ஒவ்வொன்றிற்கும் விளக்கமளித்து வீண் கால விரயம் செய்ய அஞ்சி மாதிரியாகவும், உதாரணமாகவும், கடவுள், சாத்திரங்கள், கற்பனையைச் சுருக்கமாகக் கூறியுள்ளேன். இது போலவே அனைத்தும் கற்பனை.

மனிதர்கள் தோன்றிய காலம் முதல் நாளிதுவரை ஒவ்வொருவர், ஒவ்வோர் விஷயத்தில்தான் அறிஞர்களாக இருந்துள்ளார்கள், இருந்தும் வருகிறார்கள். என்றாலும், இவருக்கு முன், பின், எக்காலமும் தோன்றவே முடியாத இப்படியும் ஒரே பெரியாரா என்றெண்ணி திகைக்கத்தக்கவரும், அரசன் (அரசு) முதல் ஆண்டிவரை, சமுதாய நடைமுறை தேவைகளனைத்திற்கும் அறிவுரைகள் கூறிய மிக்க பொது அறிவு படைத்த திருவள்ளுவர் மற்றும் ஏகாந்மவாதிகள், தாயுமான சுவாமிகள். இராமலிங்கசுவாமிகள், மகாகவி சுப்ரமண்ய பாரதியார் மற்றும் சித்தர்கள், முனிவர்கள், அறிஞர்கள், முடிவான உண்மைக் கருத்துக்களை, மாதிரிக்கு கூறப்பட்டுள்ளது.

இரண்டாமாண்டு நினைவு நாள் வெளியீடான ''உலகப் பொது நூலில்'' தாக்குதல்களிருப்பதாகச் சில அன்பர்கள் கூறினார்கள். உண்மைக்கு மாறான காரியங்களைப் பொறுக்க முடியாது உணர்ச்சிவயப்பட்டு உண்மையைத் தெரிவித்திருந்த போதிலும் இந்நூலில் கூடியவரை கடுஞ்சொல் தவிர்க்கப்பட்டுள்ளது.

மூன்றாமாண்டு நினைவு நாள் வெளியீடாக ''பெரியார்கள், கண்ட உண்மை,'' என்ற இச்சிறிய நூலை அளிக்கின்றேன்.

கு. மா. மு. கந்தசுவாமி
17.3.89

# மு. க. தையநாயகி

## மூன்றாமாண்டு நினைவு நாள் 17-3-89



*தோற்றம்: 24—3—1931 மறைவு: 17—3—1986*

# பெரியார்கள் கண்ட உண்மை



தொகுத்தவர் :
க. மா. மு. கந்தசுவாமி
ஸ்ரீ விவேகானந்த இல்லம்
49, வடக்குவீதி வேதாரண்யம்.

# பெரியார்கள் கண்ட உண்மை

பிரபஞ்சம் தோன்றி விளங்குவதற்கு, நிமித்த காரணம் உபாதான காரணம் (முதல் காரணம்) யாதென்றறிய அறிஞர்கள் தீவிரஆராய்ச்சி செய்தார்கள். இவர்கள் கண்டறிந்த விஷயங்களை, வெளிப்படுத்திய நூல்களே, உபநிடதங்களென்றும், வேதமென்றும் கூறுவது.

இவைகளில், கரும காண்ட விதிகளை அனுசரித்துப் படிக்கிரமமாக, வர வேண்டுமென்ற கருத்துக்களை யுடைய, உபநிடதங்கள் பக்தி மார்க்கத்தைப் பின்பற்றி வர வேண்டுமென்ற கருத்துக்களையுடைய உபநிடதங் கள். ஆத்மா நாத்ம விசாரணையினாலேயே அறியலா மென்ற கருத்துக்களையுடைய உபநிடதங்கள். இப்படி வழிவகை செய்து கூறியபோதிலும், எல்லா உபநிடதங் களும் ஆன்மாவே (அறிவே) முதற்காரணமென்று கூறியுள்ளது. இதில் மூதறிஞர்கள் தேர்ந்தெடுத்த ஞானமார்க்க உபநிடதங்கள் 32லும் கடைந்தெடுத்த உபநிடதங்கள் 10.

இவைகளைப் படிப்பவர் நலன் கருதி, ஞான காண்ட உபநிடதங்களை இருக்குவேதம், சாமவேதம், யஜுர்வேதம், அதர்வணவேதம் என்று நான்கு பிரிவு

களாகச் செய்தார், வியாசமுனிவர். நான்கு வேதங்களின் சாராம்ஸத்தைத் திரட்டி "பிரம்ம சூத்திரம்" என்ற நூலை இயற்றியவரும் வியாசரே.

டிை உபநிடதங்கள், பிரம்மசூத்திரத்திற்கு ஆதிசங்கரர் முதலிய மூதறிஞர்களால் பாஷ்யங்கள் செய்யப்பெற்றுள்ளது. இதில் சங்கரறியற்றிய சரீரக பாஷ்யமே முக்கியமானது. இக்கருத்தினை விளக்கியே சங்கரர் முதலிய மூதறிஞர்கள் வடமொழியில் ஆயிரக்கணக்கான அத்துவைத நூல்கள் இயற்றியுள்ளார்கள். இதையனுசரித்து தமிழ்நாடு மற்றும் கேரள, கன்னட, தெலுங்குதேச தத்துவ ஞானிகள் அவரவர்கள் பாஷைகளில் ஆயிரக்கணக்கான நூல்கள் இயற்றியுள்ளார்கள். இவையாவும் தேகாதி பிரபஞ்சத்திற்கு பிரம்மமே (அறிவே) முதற் காரணமென்றறிவித்துள்ளது.

இப்பால் தோன்றிய திருவள்ளுவர், திருமூலர், சிவவாக்கியர், சிவஞானவள்ளலார், ராமலிங்கசுவாமிகள், தாயுமான சுவாமிகள், மகாகவி சுப்ரமணிய பாரதியார், மற்றும் முனிவர்கள், சித்தர்கள், முதலானோர்களும் மூலப்பொருள், ஆன்மாவே (அறிவே) என ஆராய்ந்தும், அனுபவத்தினாலறிந்தும் அறுதியிட்டுக் கூறிவிட்டார்கள். இவர்கள் நூல்களில் பிரம்மம், ஆன்மா, சைதன்யம், கூடத்தன், மனோசாட்சி, ஜோதி, அறிவு, மற்றும் பலவிதங்களாகக்கண்டவை ஒரே பொரு

ளைக் குறிப்பதாகும். இச்சுருதிகள், யுக்தி, அனுபவத்திற்கு ஒத்ததாகவும், ஏற்றுக்கொள்ளத் தக்கதாகவும் உள்ளது.

மேற்கூறிய, இருக்குவேத முடிவான:- பிரக்ஞானம் பிரம்மம் என்பது பேரறிவே பிரம்மம்: எஜுர் வேத முடிவான:- அஹம்பிரம்மாஸ்மி என்பது நான் பிரம்மமாயிருக்கின்றேன். சாமவேத முடிவான:- தத்துவமஸி என்பது அது நீயாயிருக்கிறாய். அதர்வண வேத முடிவான;—அயமாத்மா என்பது நானே அந்தப் பிரம்மம் என்பதாகும்.

மேற்படி நூல்கள் மூலமும் அநுபவிசாரணைகள் மூலமும் இதையறிலாம். (உணரலாம்) பிரார்த்தனைகள், ஜெபதபங்கள், விழாக்கள் முதலிய புறச்சடங்குகளால் அறிய முடியாது.

தன்னையும் பிறவற்றையு மறியும் சித்துத்தன்மை இல்லாததும், தன்னையும் பிறவற்றையுமறியாத சடத் தன்மையான, உருவ வழிபாடுகள் அறிவுடைமை யாகாது.

குடமும், ஆபரணமும், தத்தம் காரணமான, மண்ணையும், தங்கத்தையும், தேடியலைவது போல நாம்

உண்மை சொரூபம் அறிவென்றுணராது வெளியில் கடவுளைத் தேடியலைவது அறியாமையாகும்.

மனிதர்கட்குத்தான் கடவுள் கற்பிக்கப்பட்டுள்ளதே தவிர, தாவரம், ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன, மிருகம், மற்றும் இதர சீவராசிகட்கு கடவுள் கற்பிக்கப் படவில்லை. ஆனால் அவைகள் கடவுளுணர்வில்லாமலேயே, மனிதர்களைப்போலவே, தோன்றி வாழ்ந்து, செயல்பட்டு, மாய்ந்தும் அழிந்தும் விடுகின்றன. இதில் மனிதர்கட்கும், மற்ற சீவராசிகட்கும் எவ்வித மாறுதலுமில்லை.

மஹான்களும், மஹாத்மாக்களும், மதாச்சாரியர்களும், புத்தர், ஏசுநாதர், முகம்மதுநபி முதலானோர்களும் இறந்துதானே போனார்கள்.

கூட்டுறவில் தோன்றிய ஒவ்வொன்றும், பிரிந்து அழிவதாயினும், உடல் கெட்டகாரணத்தாலழிவதை விட, நல்ல காரணத்தாலழிவது சாலச்சிறந்தது.

பல வேத உபநிடதங்கள் கர்மகாண்ட விதிப்படியும் பக்திமார்க்கப்படியும், உண்மை நிலைக்கு வரவேண்டியதாகக் கூறியுள்ளது. ஆனால் அதற்காகக் கற்பித்த விதியையும், வழியையுமே உண்மை என்று முடிவு கட்டி புகுத்தப்பட்ட கற்பனை கடவுளர்கள் வழிபாட்டிற்கு காலத்தையும், பொருளையும், வீணாக்காது. உண்மை

யை பின்பற்றியிருந்தால், மனித சமுதாயம் கற்பனை செய்து பார்க்க முடியாத அளவில் முன்னேறியிருக்கு மென்பதை யூகித்துப் பார்ப்போமாக.

கற்பனைகளின் விளக்கத்திற்கு மாதிரிகளும் உதாரணங்களும்:- முற்காலத்தில் மந்தமதியினர்கள் அதிகமாகவிருந்ததால் அக்கால தத்துவ ஞானிகளான மூதறிஞர்கள் நல்ல நோக்கத்திலேற்படுத்தியதே இவ் விபரீதங்கட்குக் காரணமாகி விட்டது. பிரபஞ்ச தத்துவத்தையும் (சமஷ்டி) சரீர தத்துவத்தையும் (வியஷ்டி) விளக்க பஞ்சபூத தலங்கள், ஆலயங்கள், மூர்த்திகளும், இராமாயணம் மகாபாரதம் முதலிய இதிகாசங்களும், பகவத்கீதை, ஞானவாசிட்டம்போன்ற பல ஞானசாத்திரங்களும் கற்பிக்கப்பட்டுள்ளது.

இதற்குப் பொருத்தமாக ஜென்மபூமிகள், கதா பாத்திரங்கள், உருவங்கள், சின்னங்கள் கற்பித்தும், தோற்றம், வாழ்வு மகிமைகளும் கற்பித்தார்கள். கிரமமுறைப்படி ஞானமார்க்கத்தையடையாமல் கற்பனைப் படைப்புகளையே உண்மையென்று, பிரார்த்தனைகள் திருவிழாக்களைப் பெருக்கிக் கொண்டிருக்கிறார்கள். புதிது புதிதாகக் கற்பனைக் கடவுளர்களை, மகிமையுடன் உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இதனால் கற்பனைகள் நீடித்துக்கொண்டிருக்கிறது.

இதற்கே ஆன்மீகமென்றும், இவர்களே ஆத்திகர்கள் என்றும், உண்மையைக் கூறுபவர்கள் மத உணர்ச்சிக்கு விரோதிகளென்றும் அரசு, அரசியல் மற்றும் மதத் தலைவர்கள் பாதுகாப்புகளுடனும், சட்டபாதுகாப்பு களுடனும் இயங்கி வருவது விந்தையினும் விந்தையே.

(1) சிவனுக்கு வாகனம் காளை, அம்பிகைக்கு வாகனம் சிங்கம், கணபதியின் வாகனம் மூஞ்சூறு (எலி) முருகனின் வாகனம் மயில், சிவனார் கழுத்தில் பாம்பு, கையில் அக்நி, தலையில் கங்கை (தண்ணீர்) சிங்கம் காளையை விட்டுவைக்குமா, பாம்பிற்கும் மயிலிற்கும் பகை, இவ்விரண்டும் எலியை விடுமா, கங்கையால், அக்நி அணைந்துவிடும். இம்முரண்பாடுகளுக் கிடையில் சிவனார் குடும்பம் குழப்பமின்றி இனிதே நடைபெறு கிறது. இது பிரபஞ்சத்தில் தோன்றும் அனைத்துப் படைப்புகளும் ஒரே நூலில் கோர்த்த மணிகளைப்போல் ஒரே சக்தியின் தோற்றம் என்பதையுணர்த்தக் கற்பித்த தாகும். இப்படியே செயலிற்கேற்ப படைத்த கடவுளர் கள் கற்பனையேயாகும்.

(2) இராமாயணம்:- பரமாத்வான சமஷ்டித்திறன் இராமன். ஜீவாத்மாவான வியஷ்டித்திறன் சீதை. இதையுணராத அறிகருவிகள் 5, செயல் கருவிகள் 5, ஆக பத்தும் 10 தலைகளையுடைய இராவணன், இதன் மறைப்பிற்குட்பட்ட வியஷ்டி சக்தியான ஜீவாத்மாவை

(சீதையாகக் கற்பித்ததை) புத்தி வடிவாகவுணர்த்தும் குருவான ஆஞ்சநேயரே சீவான்மா பரமாந்மாவின் இணைக்கத்தைத் தெரிவிப்பது. இக்கற்பனைப் படைப்புகள், சீதை கற்பிழந்தவளென்றும் இராம, இராவண யுத்தம் என்றது ஆரிய திராவிடப் போர் என்றும் கூற இடங்கொடுத்ததுடன் சமீபத்தில் வடநாட்டில் இராம ஜென்மபூமி விவகாரமும் பெரிதாகியுள்ளது.

மகாபாரதம்:- ஒரே சரீர தத்துவ அமைப்பில் குறைவான நல்லியல்புகளை, பாண்டவர்களெனவும், அதிகமான கெட்ட இயல்புகளை அறிவிலா குருடனான கௌரவர் வகையினரெனவும், இருசாராரும் ஒரே இராஜ குடும்பத்தார்களெனவும் இவர்களுக்குள் உண்மைக்கும், இன்மைக்கும் போர் என்றும்,

ஞானேந்திரியங்களைந்தும் சீவான்மாவையுணர்வதால், ஞானேந்திரியங்களை பஞ்ச பாண்டவர்களெனவும், திரௌபதையாக ஜீவாத்மாவையும், பஞ்ச பாண்டவர்கள் மனைவியாக திரௌபதையையும் கற்பித்தார்கள், இதனால் ஐவர்கள் மனைவியான திரௌபதை எப்படி கற்புக்கரசியாக இருக்க முடியுமென்ற கேள்விக்கிடமாயிற்று.

பரமாந்மாவை கிருஷ்ணனாகவும், சீவாந்மாக்களை கோபிகாஸ்திரீகளாகவும், பரமாந்மா சீவாந்மாக்களின்

ஐக்யம்கற்பித்தது. கிருஷ்ணன் காமாந்தகாரனென்றும், காமலீலை புரிந்தவனென்றும், கோபிகாஸ்திரீகள் வியபசாரிகள் என்று கூறவும் இடங்கொடுத்தது.

பகவத்கீதை:- சரீர தத்துவ அமைப்பை விளக்குவதற்காகவே, சரீரமே 'இரதமாகவும், சரீரத்திலுரையும் சீவாத்மாவே அர்ச்சுனனாகவும், சமஷ்டி சக்தியான பரமான்மாவே, இரதத்தை நடாத்தும் (சாரதி) கிருஷ்ணனாகவும் கற்பித்தார்கள். சரீரத்தின் நல்லியல்பு, கெட்ட இயல்புகளை விளக்கவே சரீரத்தையே குருக்ஷேத்திரமாகவும் கொண்டு தர்மத்திற்கும், அதர்மத்திற்கும் ஏற்பட்ட தர்மயுத்தமாக அத்துவைத உண்மையை விளக்கக் கற்பித்ததாகும்.

சரீர தத்துவச் செயலை 4வகைகளாக (சாதிகளாக) பிரித்துக் கூறியதை வெளியிலும் அமைத்ததால் கீதை வர்ணாஸ்ரமத்தை நிலைநாட்டும் நூலென்றும் கெட்ட இயல்புகளான கௌரவ வம்சமாகக் கற்பித்த கெட்ட இயல்புகளை அழித்து (கொன்று) நல்லியல்புகளான பாண்டவர்களே ஆட்சி செய்ய வேண்டுமென்று கூறியதையும், மேற்கண்டபடி கொலை செய்வது பாவமல்லவென்று கற்பித்ததால், கொலை செய்வது பாவமில்லையென்றுகூறும் கொலை நூல் என்றும் புண்ணியத்

தைப்புறக்கணிக்கும் நூலென்றும் கூற இடங் கொடுத்தது.

பாலை அறியாத பிறவிக் குருடன். பால் எப்படி யிருக்குமென்று கேட்க, கொக்கைப் போல் வெண்மை யாகவிருக்குமென்று கூறிக் கொக்கு எப்படியிருக்குமென வினவ, முன் கையை வளைத்துக்காட்டி இப்படியிருக்கு மென்று தடவிப் பார்க்கச் செய்த போது இது தொண்டைக்குள் போனாலென்னாவது என்று திகைத் தது போலும்.

குறிப்பிட்ட ஊருக்குச் செல்லும் மார்க்கம் அறிய ஏற்பட்ட கைகாட்டி மர கையில் கண்ட அதே ஊரின் பெயரைப் பார்த்து அவ்விடமே தங்கியதைப் போலும்.

ஆவாரம்பூ போன்று பொன்னிருக்குமென்றதை நிறத்திற்கு மட்டில் உதாரணமென்று அறியாது, உருக்க, தட்ட, நீட்ட வருமா வென்றது போலும்.

படிமுறை, வழிமுறை, உதாரணங்களாகச் சொன்ன வைகளெல்லாம் விபரீத விளைவுகளாகி விட்டது.

ஆனதால், கற்பனைகளின் விபரங்களையறிய காலத்தை வீணாக்குவது அர்த்த மற்றதும் தேவை யற்றதுமாகும்.

ஆனதால் பெரியார்கள் அறிவுரையை பின்பற்றி, சுருதி, யுக்தி, அனுபவத்திற்கொத்த விஷயங்களை ஏற்றுப் பின்பற்றுவோமாக.

# திருக்குறள்

1. அகர முதல வெழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றே உலகு.

2. அறிவுடையார் எல்லாமுடையார்
அறிவிலார் என்னுடையரேனு மிலர்.

3. அறிவுடையார் ஆவதறிவார்
அறிவிலார் அஃதறி கல்லாதவர்.

4. எப்பொருள், யார் யார் வாய் கேட்பினும்
அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு

5. எப்பொருள் எத்தன்மைத் தாயினும்
அப்பொருள் மெய்ப் பொருள் காண்ப தறிவு

6. தன்னையறியும் அறிவுதனை அறியில்
பின்னை பிறப்பில்லை வீடு

7. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

8. தேரான் தெளிவும், தெளிந்தான் கண்ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

9. தில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

10. பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

11. யாதனின் யாதனின், நீங்கியான் நோதல்
அதனின், அதனின் இலன்.

12. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறி நின்றார் நீடுவாழ்வார்.

## கீதாசாரத் தாலாட்டு

1. அறிந்து கொள் ஞானத்தாலே முதிருமஞ்ஞானந்
துரக்கிற்
சிந்தையிலாந்மா சுயமாய்த் திகழுமென்று
சொன்னவரோ

2. அறிவு தேகந்தனக்கோ ஆன்விற்கே வெனவே
பிறிவு செயிலசித்துடலம் பிரம்மமறிவென்றவரோ

3. அந்தவறிவுவந்தாலஞ் ஞானமில்லையப் பாற்
சந்ததமு மாநந்த சாகரங் காணென்றவரோ

4. ஏகம் பிரம்மமிரண்டிலை நீ வேறுமல, சோகமுறும்
பேதமறிற்
றோன்றுமின் பமென்றவரோ.

5. கூறுமுல கியற்கையுடன் கூடினுமெய்ஞானம்
வந்தோர்
சேறும் பிள்ளைப் பூச்சியும் போற்றிரிவார் காண்
என்றவரோ

6. ததியூடு கடைந்த வெண்ணெய்தான் மோரிற்
கிடப்பதுபோல்
மதியோடு கூடினும் பின்மயங்கார் காணென்
றவரோ

7. பிரம்மமென்று மீசனென்றும் பெருகுபல
சீவரென்றும்
முரைமயக் கமலதான்மா வொருவனே என்றவரோ

## கைவல்ய நவநீதம்

1. அறிவுக்குமறிவு செய்யுமறிவு
வேறுண்டென்றெண்ணும்
அறிவற்ற குதர்க்க மூடர்க்க நவத்தைப்
பலமாய்தீரும்
அறிபடுபொருணீயல்லையறிபடாபொருணீயல்லை
அறிபொருளாகு முன்னையனுபவித்தறிவாய் நீயே

2. நானென்ற பிரம்மமான நானே நானறியேனென்
றால்
நானென்பதேது பின்னை நம்முடை புந்தியென்னில்
தானது மயக்கந்தன்னிற் சாருமே சாவாதாகில்
நானென நிறைந்திருந்த ஞானமாம் நானே நானே

3. தேகமல்லால் வேறேதேகியான் காணேனென்றாய்
மோகமாங் கனவில் வந்து முளைத்திடுபவனார்
சொல்லாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்தி கண்டவனார்
சொல்லாய்
ஆக நீ நனவிலெண்ணுமறிவு தானேது சொல்வாய்

4) அதுவிதுவெனுஞ் சடங்களறிவாக வறிவைத் தந்தே
அதுவிது விரண்டு மாகா வகம் பொருளறிவாய்
நீயே

5) இன்னது தேகந்தேகியி வனென வுணர்வன்
யாவன்
அன்னவன் றன்னைத்தா னென்றறிந்த வனாகு
மென்றான்

6) எல்லாங்கண்டறியு மென்னை யேது கொண்ட
றிவே னென்று
சொல்லாத சுயஞ் சோதிச் சுட ருக்குச் சுடர்
வேறுண்டோ

7) தன்னையுந் தனக்கா தாரத் தலைவனையுங் கண்
டானேல்
பின்னையத் தலைவன் றானாய் பிரம்மமாய்
பிறப்புத் தீர்வன்

8) சத்தொடு சித்தானந் தஞ்சமந்திரஞ் சாக்ஷி ஏகம்
நித்தியம் வியாபியான்மா நீ யதுவாயறிந்து

## ரிபுகீதை

நிகழு மறிவான பரப்பிரம மல்லால் நீயுமில்லை
நானுமில்லை, யாருமில்லை
நிகழுமறிவான பரப்பிரம்ம மல்லாற் றேக முதற்றிசிய
மாந்திரணேயில்லை
சகசவறிவான பரப்பிரம்ம மல்லாற் சத்துமில்லை,
யசத்துமில்லை, சதசத்தில்லை
பகருமறிவான பரப்பிரம்ம மல்லால் பரசீவ சகங்
களெனும் பகுப்பேஇல்லை

அறிவுறு வாயமை வுற்ற வான் மாதானே யழியாம
லிருப்பதனால் சத்துமாகும்
அறிவுறுவாயமை வுற்றவான் மாதானே யனைத்துமே
விளக்குவதாற் சித்துமாகும்
அறிவுறு வாயமை வுற்றவான் மாதானே யந்தமிலா
திருப்பதனாலா நந்தமாமே

## ஞானவாசிட்டம்

1) அனைத்தயுமறிந் தோர், தம்மையறிவெனவறிவார் கண்டோர்

2) அறிந்தோர், அறிவாய், அறிவினிடத்து, அமைதலல்லால்

3) அந்த மிலாவறிவுருவே, விளங்கு, மயலொன்றிலதாகும்

4) சுத்த பரமானந்தம் தோற்றுவிக்கும் நல்லறிவாம் சோதி பெற்றேன்

5) திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டயலே தெய்வந்தேடல்

6) விரியுமறிவே நானென்று விளங்குந் தீரன்மெலிவணுகான்

## சிவஞான வள்ளலார்

1) அகரவுயிர் போல் அறிவாக எங்கும் நிகரில்
இறை நிற்கும் நிறைந்து

2) அறிவாலறியப்படு பொருளேயாகில்
பொறியாலறியப்பு காவோ.

3) ஆலயமே காயம் அறிவே சிவலிங்கம்
மாலயனுங் காணாத வள்ளல்

4) ஆறாறு தத்துவத்துக் கப்பாலதீ தத்தே
வேறாகத் தம்மை விசாரித்துங்—கூறாக
ஆனந்தம் தாமென அறியா அறிவிலிகள்
ஆனந்தம் தேடியலையுமே.

5) ஆக்கை, நீ யல்ல அறிவு நீ யென்று—மறை
வாக்கியங்கனான்கும் வகுத்துரைக்க—நோக்காமல்
மீட்சிதருமீசன் விழி யெதிராய் மன்னின்று
காட்சிதா வென்னும் கடை.

6) கற்புடை மகளிரெல்லாங் கணவனே தெய்வ
மென்பர்
சிற்பொலி சமய வேடர் சிலையையே தெய்வ
மென்பர்
தற்கொலி மாந்தரெல்லாந் தாருவே தெய்வ
மென்பர்
அற்புறு பெரியோரெல்லாம் அறிவே தெய்வ
மென்பர்

# சசிவந்நபோதம்

1) அறிகின்ற பொருளென்னு மறிவானில் வேறே
யானால்லிவ் வூனாக நானென் னலாமோ
செறிகின்ற புள்ளல்லவே கூடிவ்வகையே
செடமான வுடலென்னில் வேறென்று தெளியே

2) அறியும் பொருளென்றறியாப் பொருளென்றறிவா
கிய நீ யெனுமப் பொருடான்
பொறியின் வழி நின்றறியும் பொருளே போ
தக்கண் விழித்தறியும் பொருளே

3) இயலறிவு திசையறிவ தினமறிவ தளவா
மயலறிவ தறிவதலவறி வறி வதறிவே

4) ஐயறி வறிந்தவை யடங்கின வரேனு
மெய்யறி விலாதவர்கள் வீடது பெறாரே.

5) பூசனையு மது சகல பொருளுமறி தமையு,
மீசனையும் வேறதற அறிவதறி வெனவே

6) மெய்மையறி வில்லதமில் வேறறிவ தெல்லாந்
தம்மையறியும் மறிவதே யறிவுதானே.

## மஹாராஜத்துறவு

1) உலகினை வேர்தாக வுணர்ந்திடிற் பந்தமாகும்
மூலகினைத்தா னேயாக வுணர்ந்திடின் முத்தி
யாகும்
இலஇடத் தோன்றலெல்லாம் மென்னினைவே
யென்றெண்ணி
இலஇடக்கண்டு வேறற்றிருந் தான்னிளமை
வேந்தன்.

2) தன்னையே யன்றியொன்றுந்தானு தியா விடத்தின்
மின்னையே யொத்தவை யமித்தை கற்பிதம
தென்றும்
பொன்னையே யன்றிவேறு பூடணமிலது போல
வென்னையே யன்றி யொன்று மில்லெனத் தேர்ந்
தான் வேந்தன்

3) பந்தம் வீடென்றுமில்லை பரம்பொரு ளொன்றே
என்றுந்
தந்தந் சங்கற்பத்தாலே சாலமோகிப் பர்தீயோ
ரந்தமாதி களுமில்லா வரும் பொருணாமேயென்று
சந்தத நோக்குயந் தத்தற்பரம் தானேயானான்

4) பொய்யை மெய்யென்றறிந்து போத மின்மை யாலே
மெய்யைப் பொய்யென்றெண்ணி மெலிந்தேயுழல் வாருலகர்
பொய்யைப் பொய் யென்றறிந்த குருவினருளின்
மெய்யை மெய்யென்றறிந்தேலெ விதீர்வருயர்ந் தோர்

5) பொய்யென்றி தனைய றிந்தோர் பொருந்தி நிற்பதுளதோ
மெய்யென்ற தனையறிந்தோர்மே வாதிருப்பதுளதோ
வையமுளதோ விதனிலமைச்ச பாராய் நன்கு
யுய்ய வறிவிலாதோ ருழல்வர் நீக்கமாட்டார்

## திருமந்திரம்

1) அறிவுவடி வென்றறி யாதவென்னை
அறிவுவடி வென்றருள் செய்தான் நந்தி
அறிவுவடி வென்றருளா லறிந்தே
அறிவுவடி வென்றறிந் திருந்தேனே

2) எல்லா மறியு மறிவதனை விட்டு
எல்லா மறிந்து மிலாப மிங்கில்லை
எல்லா மறிவினை நானென்னில்
எல்லா மறிந்த இறை யெனலாமே

3) தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியா மற்றானே. கெடுகின்றேன்
தன்னை யறியுமறிவை யறிந்தபின்
தன்னை யேயர்ச்சிக்கத் தானிருந்தேனே

4) உடம்பினுக் குள்ளே உருபொருள் கண்டேன்
உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டானென்று

5) என்று நின்றேத்துவன் எம்பெருமான்தனை
ஒன்றி என்னுள்ளத்தி னுள்ளிருந்தானே

6) தன்னில் தன்னைக் காண்கிலனாகில்
தன்னில் தன்னையுஞ் சார்தற்கலவே

7) தன்னை யறிவதறிவாம் அன்றி
பின்னை யறிவது பேயறிவாம்
[கறந்தபால் முலை புகா, உதிர்ந்தபூ மறம்புகா]
மறுஜென்மமில்லை—திருமூலர்

## திருவருட்பா

1) கொள்ளைவினைக் கூட்டுறவால்கூட்டியபல் சமயக்
கூட்டமும், கூட்டத்தே கூவுகின்ற கலையுங்
கள்ளமுறுமக் கலைகள் காட்டிய பல்கதியுங்
காட்சிதருங்
காட்சிதரு கடவுளருமெல்லாம் பிள்ளை விளை
யாட்டென நன்கறிவித்து

2) தெய்வங்கள் பலபல சிந்தை செய்வாரும்
சேர்கதி பலபல செப்பு கின்றாரும்
பொய் வந்த கலைபல புகன்றிடுவாரும்
மெய் வந்ததிருவருள் விளக்க மொன்றிலார்

3) அருளறி வொன்றே வறிவு மற்றெல்லாம்
மருளறி வென்றே வகுத்த மெய்ச்சிவமே

4) அறிபவை எல்லா மறிவித்து என்னுள்ளே
பிறிவற விளங்கும் பெரிய சற்குருவே

5) அருள்ஒளி என்தனி யறிவினில் விரித்தே
அருள் நெறி விளக்கெனும் அருட்பெருஞ் ஜோதி

6) அருள் வெளியில் ஒளிவடிவா யானந்தமயமாய்
சுத்தசிவ வனுபவமாய் விளங்கிய தெள்ளமுதே

7) அறிவறிவா யவ்வறிவிக் கறிவா யெவ்விடத்து
மானதுவாய்
தானது வாயதுவதுவாய் நிறைந்தே

8) அறிவுக் கறிவாம் அருட்பெருஞ் ஜோதி
சாதியு மதமும் சமயமும் காணா ஆதியனாதியாம்
அருட்பெருஞ் ஜோதி

9) அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள்ளமைந்த பேரொளியே

10) எவ்விடத்து மெவ்வுயிர்க்கு மிலங்கு சிவமொன்றே
என்னாணை யென்மகனே யிரண்டில்லை யாங்கே

11) உயலுறு மென்னுயிர்க்கினியயுறவே
யென்னறிவில்
ஓங்கிய பேரன்பே என்னைன்பிலுறு மொளியே

12) களங்கம் நீத்து உலகம் களிப்புற மெய்நெறி
விளங்க என்னுள்ளே விளங்கு மெய்ப்பொருளே

13) கலையுரைத்த கற்பனையே நிலை யெனக்
கொண்டாடும்
கண்மூடி வழக்கமெலா மண்மூடிப் போக

14) ஞானமாய் விளங்கும் வெண்ணிலாவே என்னை
நானறியச் சொல்லு கண்டாய் வெண்ணிலாவே

15) தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே
தந்திரம் நீ சொல்லவேணும் வெண்ணிலாவே

16) சாதியு மதமும் சமயமும் பொய்யென
ஆதியிலுணர்த்திய அருட்பெருஞ் ஜோதி

17) பரிவுற்றறியாப் பெரும் பொருளாய் என்
அறிவுக்கறிவாம் அருட்பெருஞ் ஜோதி

18) பிரிவேது இனி உனைப் பிடித்தனம் உனக்குநம்
அறிவே வடிவெனும் அருட்பெருஞ் ஜோதி

19) விதிக்கு மூலகுயிர்க்குயிராய் கலந்த கதிரொளியே
விதிக்கு மூலகுயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே

[இறந்தவர்களைக் குறித்து செய்யப் பெறும் கருமாதி முதலிய சடங்குகள் தேவையற்றன.]

(ஒ-ம்) சிதம்பரம் இராமலிங்கம்

## மகாகவி சுப்ரமண்ய பாரதியார்

1. இத்தரை மீதினிலேயிந்த நாளினில்
இப்பொழுதே முக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையில் களிப்பவர்-தூய
வராமென்றிங்கூடேடா சங்கம்

2. எதனூடும் நின்றோங்கும் அறி
வொன்றே தெய்வமென் றோதியறியீரோ
சுத்த அறிவே சிவமென்று கூறுஞ்
சுருதிகள் கேளீரோ

3. செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திடலாமென்றே எண்ணியிருப்பர்
பித்த மனிதர் அவர் சொல்லுஞ் சாத்திரம்
பேயுரை யாமென்றிங்கூதேடா சங்கம்

4. தன்னையறியாய் சகத்தெல்லாந் தொளைப்பாய்த்
தன் பின் நிற்கும் தனிப் பொருளைக்
காணவே வருந்துவாய் காணெனிற் காணாய்
சகத்தின் விதிகளைத் தனித்தனியறிவாய்
பொது நிலையறியாய் பொருளையுங் காணாய்
சுத்தவறிவே சிவமென்று கூறுஞ் சுருதிகள்
கேளீரோ

5. ஆனபொருள்கள் அனைத்தினும் ஒன்றாய்
அறிவாய் விளங்கு முதற்சோதியே நான்

6. ஆயிரந் தெய்வங்களுண்டென்று தேடியலையும்
அறிவிலிகாள்
பல்லாயிரம் வேதம் அறிவொன்றே தெய்வமுண்
டாமெனல் கேளீரோ

7. உள்ளத்திலுண்மை யொளியுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்

8. சுத்த அறிவே சிவமென்று கூறுஞ்
சுருதிகள் கேளீரோ
பலபித்த மதங்களிலே தடுமாறி பெருமையழிவீரோ

[சிவலோகம், வைகுந்தம், கிரியைகள் கற்பனை,
உண்மையல்ல.] -பாரதியார்

## தாயுமான சுவாமிகள்

1) அறிவோடு அறியாமையற்று அறிவினூடே
குறியில் அறிவு வந்து கூடுநாள் எந்நாளோ.

2) அல்லும் பகலும் அறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளும் சுமை காண்பராபரமே

3) அறியும் தரமோ நான் உன்னை
அறிவுக்கறிவாய் நிற்கையினால்

4) அறியாத என்னை அறிவாயும் எனது
அகப்புறமும்
பிறியாது அறிவித்த பேரறிவாம் சுத்த
பேரொளியே

5) அறிவில் அறியாமையற்று அறிவாய் நின்று
பிறிவற ஆனந்தமயம் பெற்று

6) அறிவுக்கு அறிவுதாரகம் என்று அறிந்தே
அறிவோடு அறியாமை நெறியில் புகுந்து

7. அறிவை அறிவதுவே ஆகும் பொருளென்று
உறுதி சொன்னவுண்மையினை ஒரும்
நாளென்னாளோ

8. அறியாது அறிந்து எமை ஆள் அண்ணலை
நாமாகக்
குறியாத வண்ணம் குறிக்கும் நாளென்னாளோ

9. அறியாமை ஈதென்றறிவித்த அன்றே நான்
பிரியா அருள் நிலையும் பெற்றேன் பராபரமே

10. அறிவாரு மில்லையோ ஐயோ என்னையாரென்று
அறியாத அங்க தேசத்தில்

11. அறிந்த அறிவெல்லாம் அறிவின்றி இல்லை
அறிந்த மனம் அற்ற மவுனம்

12. அறியாமை மேலிட்டு அறிவின்றி நிற்கும்
குறியேற்கு அறிவென்ற கோலம் அறிதே ஆம்

13. ஆர் அறிவாரென்ன அனந்தமறை ஓலமிடும்
பேரறிவே இன்பப் பெருக்கே பராபரமே

14. என்னறிவை உள்ளடக்கி என் போல் வரும்மவுனி
தன்னறிவுக்குள்ளே நான் சாரு நாள் எந்நாளோ

15) என் அறிவுக்குள்ளே இருந்தது போல் ஐயாவே
நின் அறிவுக்குள் நின்னுடன் யான் நிற்க
வைத்தாலாகாதோ

16) என்னையறிய எனக்கறிவாய் நின்றருள் நின்
தன்னையறிந்து இன்ப நலம் சாரவைத்தா
லாகாதோ

17) சிற்றறிவை மெள்ளச் சிதைந்து எம்மான்
பேரறிவை
உற்றறியா வண்ணம் அறிந்தோங்கும் நாளெந்
நாளோ

18) சித்தமிசை குடி கொண்ட அறிவான தெய்வமே
தேஜோமயானந்தமே

19) சுத்த அறிவாய்ச் சுகம் பொருந்தினல்லால்
சித்தந் தெளியா தென் செய்வேன் பராபரமே

20) செம்மையறிவாலறிந்து தேகாதிக் குள்ளிசைந்த
எம்மை புலப்படவே யாமறிவ தெந்நாளோ

21) தன்னையறியதனி அறிவாய் நின்றருளும்
நின்னையறிந் தென்னறிவை நீங்கி நிற்க
வேண்டாவோ

22) தன்னையறியாது சகந்தானாயிருந்து விட்டால்
உண்மையறிய அருளுண்டோ பராபரமே

23) வாக்கால், மனத்தால், மதிப்பறியாய் நின்னருளை
நோக்காமல் நோக்கி நிற்கும் நுண்ணறிவு காண்
பேனோ

24) ஜோதியே யானந்தச் சுகவடிவே தூவெளியே
ஆதியே நின்னை அறியவைத்தாலாகாதோ
(செத்தபின் எவ்வித கிரியையும் செய்யாதீர்)
தாயுமானசுவாமிகள்

## சிவவாக்கியர்

(1) பேசுவானு மீசனே பிரம்ம ஞானமும்முளே
காண வேணுமென்று நீர் கடல் மலைகளேறுவீர்
ஆணவமதல்லவோ அறிவிலாதமூடரே
வேணுமென்றெவ் வீசர்பாதம் மெய்யுளே விளங்கி
னால்
காணலாகும் நாதனைக் கடந்து நின்ற சோதியை

(2) கோயிலாவதேதடா, குளங்களாவதேதடா
கோயிலுங் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துள்ளே குளங்களுமனத்துளே
ஆவது மழிவது மில்லை யில்லை யில்லையே

## பாம்பாட்டிச் சித்தர்

தன்னையறிந் தொழுகுவோர் தன்னைமறப்பர்
தன்னையறியாதவரே தன்னைக்காட்டுவார்
பின்னையொரு கடவுளை பேண நினையார்
பேரொளியை, பேணு வாரென்றாடாய்பாம்பே

## சிவஞான சித்தியார்

பார்ப்பனவெல்லாம் பரமா யறிதல்
சீர்படு பேரறிவுடையோர் திறனே
அறியாமையறிவ கற்றியறிவினுள்ளே
அறிவதனை யருளினானறியாதேயறிந்து

## ஔவை குறள்

1. அனைத்துருவாய அறிவை அகலின்
தினைத் துணையுமில்லை சிவம்
2. தன்னையறியும் அறிவுதனைப்பெறில்
பின்னைப் பிறப்பில்லை வீடு
3. உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்

## சந்நியாசி கீதம்

அறிவு மெய்யெனும் அருவிகளுடனே பரமானந்தத்
திருமா நதியாய்
ஒன்றேயுளதஃதன்றி மற்றிலையால் அதுதான்
நியென்றறியக் கடவை
காட்சியாகவும், சாட்சியாகவும் ஆன்மாவாகவும்
அப்பொருள் தோன்றும்
அது தான் நீயென்றறியக் கடவை

## திருநாவுக்கரசு சுவாமிகள்

தன்னிற்றன்னை யறியுந்தலை மகன்
தன்னிற்றன்னை யறியத் தலைப்படும்
தன்னிற்றன்னை யறி விலநாடியின்
தன்னிற்றன்னை யுஞ் சார்தற்கரியனே

## திருஞான சம்மந்தர்

அறிவாலறியப்படு பொருளேயாகில்
பொறியாலறியப் புகர்வோ- பொறியாரக்
கண்டதெலாம் மாயையெனக்கண்டித்தான்
மெய்ஞானம் உண்டதிருச்செவ்வாயான்

## பிரம்ம நாமாவளி

கால மூன்றினுமே யெங்குங்ககநம் போலொருப்
படித்தாய்
கோலமாய் நிறைந்த நாமே கூறு நித்திய சுத்தாதி
சீலமாமி லட்சணத்தைச் சேர்ந்துறைகின்றதாலே
சாலநாம் பிரமமென்றே சந்ததஞ்சிந்தை செய்வாய்

## மூடமதி திறவு கோல்

அண்டர் கோனிருப்பிடம் அறிதுணர்ந்தஞானிகள்
அண்டர் கோனிருப்பதை அறிக்கையார்தனுமே
கண்டகோயில் தெய்வமென்று கண்டுணர்ந்தஞானிகள்
கண்ட கோயில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே

## பாகவதபுராணம்

வாக்கினைக் கடந்து ஓங்கி மற்றெங்கனு
நீக்கமின்றி நிறைந்த அறிவினை—ஊக்கமுற்று
உணர்தற் கிட னாகலின்
ஆக்கையுங் குருவாயதரசனே

## அத்வைதவுண்மை

தோன்றி விளங்கும் பொருளெல்லாந் தொல்
வேதாந்த விசாரணையில்
ஊன்றிநோக்கியனு தினமும் யூகமதனிற் பரிசயித்தால்
தோன்றி விளங் குமறி வொன்றே
சொல்மாத்திரமாய் விடுமுலகம்
ஊன்றி நோக்காதவர்கட்கேஉ ளதுபோல்தோன்றியிடும்

## சைவசித்தாந்தம்

ஆறு தத்துவத்துக் கப்பால தீதத்தே
வேறாகத் தம்மை விசாரித்துங்—கூறாக
வாநந் தந்தாமென்றறியா வறி விலிக
ளாநந்தந் தேடியலையுமே

## ஒழுவிலொடுக்கம்

மண்ணாதி, சத்தாதி, வாக்கு, மனமாதி
கண்ணாதி நாதாந்தங் கண்டகன்ற—உண்மை
தனையனு வென்றே யுணர்த்துஞ் சார்பினையுங் கண்ட
உனை அறிவென்றுள்ளேயுணர்

உனக்குள் நீ நின்றுலா வினைதைக் காணாமல்
நானென்றிருந்து நலன ழிந்தேன் பூரணமே

— பட்டினத்தார்

மனதையொரு வில்லாக்கி, வான்பொறியை நாணாக்கி
என தறிவை அம்பாக்கி எய்வதினியெக் காலம்

— பத்திரகிரியார்

அவரவர் தம தமது அறிவு அறிவகை வகை
அவரவர் இறையவர்.

— நம்மாழ்வார்

அறிவையறிவது பொருளென
வருளிய பெருமாளே.

— அருணகிரியார்

படித்தறிந்த போதே பலகலையாக மங்களெலா
மெடுத்தெறிந்து விட்டேனெனைவிட வேறிலையென்றே

— குமார தேவர்

ஐயறி வெய்திய கண்ணும் பயனின்றே
மெய்யறிவிலாதவர் வீடது பெறாரே

— விர்த்தாஜலபுராணம்

உன்னுமுணர்வுக் குணர்வாய் எனக்குண்மை தந்தீ
மன்றுஞ் சுருதிப் பொருளாய் வழிகாட்டி நின்றாய்

— வைராக்யசதகம்

மையலொன்றற இவ்வறி வினை யறியின்
மானிடன் முத்தனாம்

— பிரம்மகீதை

தன்னை மறைத்த பந்த மதைத் தள்ளிநீக்கிற்றான் விளங்கும்
தன்னைமறந்ததே பந்தந்தன்னை யறிந்ததே முத்தி

—நிஜானந்தபோதம்

